2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 23—3—75 ஞாயிறு மலர்: 44

## காங்கிரசில் பிற்போக்கை கண்டுபிடிக்கிருர் புபேஷ்குப்தா

புதுடெல்லி, மார்ச், 20—

நாடாளுமன்ற ராஜ்ய சபாவில் வலது கம்யூனிஸ்ட் உறுப்பினர் புபேஷ்குப்தா இந்திய அரசின் பொருளாதாரக்கொள்கை மீது பேசும்போது நிதி அமைச்சர் சுப்ரமணியத்தை'பிற்போக்கு சக்திகளை பலப்படுத்தும் தத்துவங்களில் மிகப்பெரிய பேச்சாளி'' என்று வர்ணித்தார் இதேபோல், மத்திய தொழில் அமைச்சர் டி. ஏ.பாயை, போலித்தனமான பொருளாதார சூரப்புலி என்று குறிப்பிட்டார்.

## இந்தியாவில் அந்நிய மூலதனம்

புதுடெல்லி, மார்ச் 20—

இந்தியாவில், கூட்டுத்தொழில்களிலும் வியாபார நிறுவனங்களிலும் 1750.4 கோடிரூபாய் அந்நிய மூலதனம் கொட்டப்பட்டுள்ளது. இத்தகவலை நிதியமைச்சர் சி. சுப்ரமண்யம் நாடாளுமன்றத்தில் தெரிவித்தார்

1972-73-ல் மட்டும் பங்குத் தொகை எட்டிலாபம் என்ற பெயரில் 67.2 கோடிரூபாய் இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்கு எடுத்துச்செல்லப்பட்டது.

### தாய்லாந்திலிருந்தும் விரட்டுகிருர்கள்; பிலிப்பைன்ஸ் உறவும் முறிகிறது

### அமெரிக்காவின் வார்த்தைகளை நம்புவதற்கு ஒரு நாடுமில்லை

# கம்போடியா இழப்பு அமெரிக்காவுக்கு அடி

## அமெரிக்க ஜனதிபதி போர்டு அலறுகிருர்

நாம்பென் (கம்போடியா) மார்ச் 21—

கம்போடியா கம்யூனிஸ்ட் வசமாவது, அமெரிக்காவுக்கு ஆபத்தை உண்டாக்கியிருப்பதாகவும், ஆசியாவில் ஒரு நாடு கம்யூனிஸ்ட் கையில் போய் விட்டால், அப்புறம் ஒவ்வொரு நாடும் கம்யூனிஸ்ட் வசமே போய்விடுமென்றும் அமெரிக்க ஜனதிபதி ஃபோர்டு அலறுகிருர்.

அதுமட்டுமல்ல; கம்போடியாவில் லான்நால் அரசு விழுவதால், தாய்லாந்திலிருந்து அமெரிக்கத் துருப்புக்களை வெளியேற்ற நிர்ப்பந்திக்கிருர்களென்றும்—பிலிப்பைன்ஸும் அமெரிக்காவுடன் உள்ள உறவைக் கத்தரித்துக் கொள்ள துடிக்கிறது என்றும், அமெரிக்காவின் வார்த்தையில் எந்த நாட்டுக்கும் நம்பிக்கை இல்லை என்றும் போர்டு அழுதார்.

கம்போடியாவில் அமெரிக்கபொம்மையான லான்நால் அரசின் தலைநகரான நாம்பென் நகரும், எந்தச் சமயத்திலும் தேசபக்தப் படைகள் கையில் விழுந்துவிடும்.

நாம்பென் நகரிலுள்ள அமெரிக்க தூதுவராலயம் காலியாகிக் கொண்டிருக்கிறது. அங்குள்ள முக்கியமான தஸ்தாவேஜுகளையெல்லாம் தீயிட்டுக் கொளுத்திக் கொண்டிருக்கிருர்கள். இங்குள்ள அமெரிக்கர்கள் ஒருவருக்கொருவர் தைரியமாக இருக்கும்படி சொல்லிக் கொண்டே, ஒவ்வொருவரும் நடுங்குகிருர்கள்.

ஆஸ்திரேலிய தூதுவரர்லயம் காலியாகி, அதில் வேலை செய்த ஊழியர்கள் டங்களா தேஷுக்குப் போய் விட்டார்கள்.

புரட்சிக்காரர்களின் ராக்கெட் பிரஞ்சு தூதுவராலயத்தில் விழவே, பிரஞ்சுக்காரர்களும் மூட்டை முடுச்சுகளைக் கட்டுகிருர்கள்.

மேற்கு ஜெர்மன் தூதுவராலயமும் வெளியேறுமாறு அறிவிக்கப்பட்டுவிட்டது.

ஏறக்குறைய கம்போடியா முழுவதும் புரட்சிககாரர்கள் வசமாகி விட்டது அமெரிக்க பொம்மை லான்நால் உயிர்தப்பி ஓடுவதற்கு வழிதேடிக் கொண்டிருக்கிருர்.

### போர்டு கவலை

கம்போடியாவில் புரட்சிப் படைகளின் கை ஓங்கி விட்டது கண்டு, அமெரிக்க அரசு ஆழ்ந்த கவலையில் மூழ்கிக் கிடக்கிறது. கடந்த 17-ம் தேதி அமெரிக்காவில் இண்டியான நகரில் அமெரிக்க ஜனதிபதி ஃபோர்டு பேசுகையில்,'அமெரிக்காவின் தேசீயப் பாதுகாப்புக்கு கம்போடியா ஜீவாதாரமானது என்றும், 'கம்போடிய நஷ்டமானது அமெரிக்காவுக்கும் அமெரிக்காவின் ஆசியக் கூட்டாளிகளுக்கும் மேற்கொண்டும் கிடைத்த தோல்விகளாகும்'—என்று பத்திரிகை நிருபர்களிடம் கூறி வருந்தினர்.

### ஒன்று போய் விட்டால் ஒவ்வொன்றும் போகுமே

போர்டு மேலும் பேசுகையில், 'ஆதிக்கக்கோட்பாடு'என்று ஒன்றை அமெரிக்க நிருவாகம்நிர்ணயித்திருக்கிறது அதாவது, கம்யூனிஸ்டுகளிடமோ அல்லது கம்யூனிஸ்டுகள் தலைமை தாங்கும் புரட்சியாளர்களிடமோ ஒரு ஆசிய நாடு விழுந்து விட்டால், மற்ற ஆசிய நாடுகளும் ஒன்றன் பின்ஞென்ருக விழுந்துவிடுமென்பதுதான அந்தக் கோட்பாடு. ஆம். முதல் ஒரு நாடு போவதால், அமெரிக்கப் பாதுகாப்பைப் பாதித்துள்ளது''—என்ருர்.

### தாய்லாந்திலும்-பிலிப்பைன்சிலும்

"லான்நால் அரசின் இராணுவ நிலைமை சீர்குலைந்து வருவதால், தாய்லாந்திலுள்ள அமெரிக்கப் படைகளுக்கு நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது தாய்லாந்தை விட்டு அமெரிக்கப் படைகள் வெளியேற வேண்டுமென்று கணிசமான அளவுக்கு கோரிக்கையும் நிர்ப்பந்தமும் ஏற்பட்டிருக்கிறது.

''அதுமட்டுமின்றி, அமெரிக்காவுடன் உள்ள உறவை மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று கோரிக்கை எழுந்துள்ளது''—என்றும் கூறினர்.

### எங்கள் வார்த்தையில் நம்பிக்கை இழந்தனர்.

"கம்போடியாவுககு மேலும் அதிக அளவில் இராணுவ உதவிகளை அனுப்ப அமெரிக்க காங்கிரஸ் சபை தயங்கிப் பின் வாங்கியது ஏன்?'—என்றுபத்திரிகை நிருபர்கள் கேட்டனர்.

அதற்கு ஃபோர்டு பதிலளிக்கையில், ''என்ன செய்வது?...ஒரு தேசம் விட்டால் இன்ஞெரு தேசம்...எங்கள் வார்த்தையில் நம்பிக்கை இழக்கிறது''—என்று பொருமினர்.

மேற்கண்ட தகவலை "எகனமிக் டைம்ஸ்'' பத்திரிகையின் நிருபர் கம்போடியாவின் நாம்பென் நகரிலிருந்து எழுதியனுப்பியுள்ளார் மார்ச் 19-ந் தேதிய இதழில் வெளி வந்துள்ளது.

## பட்ஜெட் வெறும் கணக்கே காங். எம்.பி. தாக்குதல்

புதுடெல்லி,மாாச்.14—

ஒரு சுயபல பொருளாதாரத்தை அமைத்தல் என்ற குறிக்கோளை அடைவதிலும் வறுமையை ஒழிப்பதிலும் அரசுக்கு சரியான திசைவழி இல்லை என காங்கிரஸ் எம். பி. யான சந்திரசேகர் ராஜய சபையில் பொது பட்ஜெட் மீதான விவாதத்தில் கூறியுள்ளார்.

அவர் பட்ஜெட் பற்றி குறிப்பிடும் போது அரசாங்கத்தின் நிதி வருவாய் பற்றியும அதன செலவு பற்றியுமான ஒரு வெறும் கணக்குதான் என்ருர் அவர்.

1964ம் ஆண்டிலிருந்து 71 வரையில் 20 ஏகபோக முதலாளிகள், 66 சதவீதம முதல் 200 சதவீதம் வரை ஆஸ்திகளை பெருக்கிகொண்டனர் என அரசு விபரங்களை மேற்கோள் காட்டிக் குறிப்பிட்டார்.

ஏகபோக முதலாளிகளின் வளர்ச்சிகளை தடுப்பதற்கு என்று ஏகபோக வளர்ச்சி தடுப்புச் சட்டத்திற்கு திருத்தங்கள் கொண்டு வரப்போவதாக கூறப்பட்டது. அத் திருத்தங்கள் என்ன வாயிற்று எனவும் கேட்டார் அவர்.

ஏகபோக முதலாளிகளுக்கு பல்வேறு வழிகளில் பலவேறு சுதந்திரங்கள் கொடுககப்பட்டுள்ளன. அதன காரணமாக அவர்களின வளர்ச்சி ஒவ்வொரு நாளும் அதிகரிக்கின்றன என்று குறிப்பிட்டார்.

## மத்திய அரசின் பட்ஜெட்டில் பற்றுக்குறை ரூ. ஆயிரம் கோடி

### தோழர் மாத்யூகுரியன் பேச்சு

புதுடில்லி, மார்ச். 25—

பொருளாதார மந்தமும் பணவீக்கமும் இனி மேலும் தொடர்நது இருக்குமென்று, பணவீக்கம் இல்லாத ஒரு பட்ஜெட்டை சமர்ப்பித்து விட்டதாக நிதிமந்திரி சி. சுப்ரமண்யம் பேசுவது ஏமாற்றுப் பேச்சாகும் என்றும் ராஜ்ய சபையில மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் தோழர் மாத்யூ குரியன் பேசினர்.

இந்த 1975—76ம் ஆண்டு பட்ஜெட்டானது, சுமார் ரூ 800கோடிமுதல்ரூ 1000 கோடிவரை பற்றுக்குறையை உண்டுபண்ணும எனறும் குரியன் கூறினர்.

இந்த பட்ஜெட்டில் பற்றுக்குறை பெருமளவில் இருப்பதை நிதி மந்திரி மறைத்துள்ளார். உண்மையில் உபயோகப் பொருள்கள் ஒவ்வொன்றின் மீதும் வரி விதித்திருப்பதானது பணவீக்கத்தை மேலும் அதிகப்படுத்தப் போகிறது என்றும கூறினர்.

இந்த பட்ஜெட்டானது, 5வது திட்டத்தின் சவப்பெட்டியில் அறையும் கடைசி ஆணியாகும் என்றும் கூறினர்.

இந்த நிலைமையிலிருந்து நாட்டை பாதுகாத்திட வேண்டுமானல், உயர்மதிப்பு நோட்டுகளை செல்லாததாக ஆக்க வேண்டும் என்ருர்.

அன்னிய தனியார் மூலதனத்தை தேசவுடைமையாக்க வேண்டுமென்றும் வலியுறுத்தினர்.

சகல தொழில் முதலாளிகளின் லாபத்துக்கும் வரம்பு கட்டவேண்டுமென்றும கூறினர்.

அன்னிய நாணயச் செலாவணி சம்பாதித்து தரக்கூடிய கேரள முந்திரித் தொழிலையும், கயிறு தொழிலையும் மத்திய அரசு பாதுகாகக வேண்டுமென்றும் கூறினர்.

பெருமுதலாளிகளுக்கு சலுகைகள் தந்தும், ஊழியர்களின் ஊதியததை முடக்கியும், ஏழை மக்களையே பாதிக்கும் வரிகளைப் போட்டும வதைப்பதாகவும குற்றம சாட்டினர்.

## ஏப். 6-ல் எதிர்ப்பு தினம் வெற்றியடையச் செய்வீர்!

### மார்க்சிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டி அறைகூவல்

கல்கத்தா, மார்ச். 22—

பிரஜா உரிமைகளை மீண்டும் பெறுவதற்காக, ஏப் 6-ல் நடக்கவிருக்கும்'எதிர்ப்பு தின'த்தை முழு வெற்றியடையச் செய்யுமாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்கமிட்டி அறைகூவல் விடுத்துள்ளது.

கடந்த 7-ந் தேதி முதல் 13-ந் தேதி முடிய நடந்த கட்சியின் மத்தியக் குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் வருமாறு:—

உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டம் ('மிசா'), இந்தியப் பாதுகாப்பு சட்டம் [டி ஐ ஆர்), தடுப்புக்காவல சட்டம் (பி டி ஏ) ஆகியவற்றை வாபஸ் பெறுதல்—அவசரகால நிலையை ரததுச் செய்தல்— பிரஜா உரிமைகளையும் ஜனநாயக உரிமைகளையும் மீண்டும் வழங்குதல் — ஆகிய கோரிககைகளை வற்புறுத்தி, ஏப்ரல் 6-ந் தேதியை 'எதிர்ப்பு தின''மாக அனுஷ்டிக்கும்படி ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் அமைக்கப்பட்டிருக்கும் அகில இந்திய இணைப்புக்குழு அறைகூவல் விடுத்துள்ளது.

பிரஜா உரிமைகளை அரிப்பது என்பது இன்று ஒரு அகில இந்திய நிகழ்ச்சியாக இருககிறது. அரசியல் கட்சிகள், வெகுஜன ஸ்தாபனங்கள், தனிப்பட்ட பிரஜைகள் ஆக எல்லோருமே இக்கொடுமையை இன்று நேருக்கு நேர் சந்திக்கிருர்கள்.

அரைப்பாசிச பயங்கரத் தாக்குதலை மேற்கு வங்கத்தில் நேருக்கு நேர் சந்தித்து வருகின்ற மார்க்சிஸட் கம்யூனிஸட கட்சி — தற்போது கேரளத்திலும் இந்த அரைப பாசிச பயங்கரத் தாக்குதல் விஸ்தரிக்கப்படுவதையும கண்கூடாகப் பார்க்கின்ற மார்க்சிஸ்ட் கம்யூனிஸட் கட்சி—ஏப் 6-ம் நாளை எதிர்ப்பு தினமாக அனுஷ்டிக்கும்படி விடுக்கப்பட்டுள்ள அறைகூவலை வரவேற்கிறது; இந்த எதிர்ப்பு தினத்தை வெற்றிகரமாக்கும்படி அனைததுப்பகுதி மக்களையும் கேட்டுக் கொள்கிறது.

திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் நடந்துவரும் இயக்கம்சம்பந்தமாக ஜெயபபிரகாசருடன் வெளிப்படையான வேறுபாடுகள் இருந்தபோதிலும், காங்கிரஸ் அரசாங்கத்துக்கும் அதன் ஒரு கட்சி எதேச்சாதிகார ஆட்சி அமைக்கும முயற்சிக்கும் எதிராக அவர் முன்வைத்துள்ள ஜனநாயகக் கோரிக்கைகளை மார்க்சிஸ்ட்கமயூனிஸ்ட் கட்சி ஆதரித்துக் கொண்டு வந்திருக்கிறது.

அக்கோரிக்கைகளை நமது கட்சி தனியாக தனது சொந்த மேடைகள் மூலம் மககளிடையே பிரபலபடுத்திக்கொண்டுவந்திருக்கிறது; குறிப்பிட்ட பிரச்சனைகள் மீது பொதுவான எதிர்ப்பைத் தெரிவிக்கும் பொருட்டு தனது நடவடிக்கைகளை ஏககாலத்தில தனியாக மேற்கொண்டு வந்திருக்கிறது.

ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையின் கீழ் அமைககப்பட்டுளள ஜனசங்கர்ஷ சமிதிகள் உட்பட அனைத்துக் கட்சிகளுடனும், வெகுஜனஸ்தாபனங்களுடனும் ஒன்றுபட்டு ஏப 6-ந் தேதியஎதிர்ப்பு தினத்தை முழு வெற்றியடையச் செய்யும்படி தனது கிளைகளுககும் உறுப்பினர்களுக்கும் மார்க்சிஸட் கமயூனிஸட கட்சியின் மத்தியக்கமிட்டி அறைகூவல் விடுக்கிறது.

இந்த எதிர்ப்பு தினத்துக்கு ஏற்பாடு செய்தவர்கள், அந்த தினத்தை பிரஜா உரிமைகள் தினமாக மட்டுமே கருராக நடததுவார்கள என்று மத்தியக்கமிட்டிநம்புகிறது.

## ஐந்து கோடி ரூபாய் ரயில்வே சொத்து அபேஸ்

### அரசியல் வாதிகளும் அதிகாரிகளும் போலீசுடன் சேர்ந்து போட்டபோடு

பாட்ன, மார்ச். 20—

பீகாரில் கோடர்மா ரயில்வே ஜங்ஷனில் திடீர் சோதனை நடத்தப்பட்டதில், பெருமளவில் இரயில்வே சொத்துக்கள் திருடப்பட்டிருப்பது தெரியவந்தது.

பீகார் அசெம்பிளியில் இந்தத் திருட்டு விஷயத்தைப் பற்றி மந்திரி தரோகா பிரசாத ராய் தெரிவித்தார்.

### போலீஸ் போட்டபோடு

கடந்த பிப்ரவரி 28-ம்தேதி நடந்த திடீர் சோதனையின் போது ரயில்வே பாதுகாப்புப் படையினரின் வீடுகளிலிருந்து ரூ 56 லட்சம் மதிப்புள்ள நகைகளும் ரொக்கமும் கைப்பற்றப்பட்டதாகவும்—ரயில்வே போலீசார் பலரும் கைது செய்யப்பட்டிருப்பதாகவும் மந்திரி அறிவித்தார்.

### அரசியல் பிரமுகர்களுக்கும் அதிகாரிகளுக்கும் பங்கு

இரயில்வேக்குச் சொந்தமான சொத்துககளையும், இரயில்வேயில அனுப்பப்படும் பார்சல்களையும் திருடி விற்றுச் சேர்த்து வைத்த பணம்தான் இந்த 56 லட்சம் ரூபாய்!

கைது செய்யப்பட்ட போலீஸ்காரர்களிடம் விசாரணை நடத்தியதில் இந்தத் திருட்டில் போலீஸ்காரர்கள் மட்டுமல்லாமல், இரயில்வே உயர் அதிகாரிகளும் அரசியல்வாதிகளும் கூட்டுச் சேர்ந்து கொள்ளையடிததிருக்கிருர்கள் என்றும் மந்திரி கூறினர்.

### ஐந்து கோடி ரூபாய்க்கு

இப்படிப்பட்ட திருட்டு வேலைகள் ஆண்டுக்கணக்கில் நடந்து வருவதாகவும் இதுவரை ரூ. 5 கோடி அளவுக்கு திருடப்பட்டிருப்பதாகவும் ஒரு அங்கத்தினர் கூறினர்.

விஷயம் விசாரணையில் இருப்பதால் விபரங்களையும் பெயர்களையும் வெளியிட முடியாதென்றும் மந்திரி ராய் கூறினர்.

இரயில்வேயில் திருடப்பட்ட சரக்குகளை, ஸ்தல வியாபாரிகள் தங்கள் கடைகளில் வைத்து விற்று பெருஞ் செல்வம் திரட்டி விட்டதாகவும் ஓர் அங்கத்தினர் கூறினர்.

எந்தக் கட்சியைச் சேர்ந்த அரசியல்வாதிகள் இந்தத் திருட்டில் ஈடுபட்டிருக்கிருர்கள் என்று கேட்டதற்கு மந்திரி பதில் சொல்லவில்லை. காரணம் தன் சொந்தக்கட்சி கூண்டில் நிற்க வேண்டியிருக்குமே என்ற பயம் போலும்!

தீக்கதிர்

# ஹவானு மாநாடு

நடுநிலை நாடுகள் அல்லது கோஷ்டி சேரா நாடுகள் (குறிப்பாக எந்த வொரு சார்பு மில்லாத நாடுகள்) என்று வர்ணிக்கப்படும் நாடுகளின் பிரதிநிதிகள் கடந்த முன்று நாட்களாக கயூபாவின் தலைநகரான ஹவானுவில் கூடி ஒரு அறிக்கையை வெளியிட்டுள்ளனர் இந்தியாவின் சார்பாக வெளிநாட்டமைச்சர் சவான் இக்கூட்டத்தில் கலந்து கொண்டார்.

வளர்ச்சியடைந்த வல்லரசுகள் அல்லது முதலாளித்துவ நாடுகள்—(இவற்றில் ஏகாதிபத்திய நாடுகள், குறிப்பாக அமெரிக்கா, நிச்சயம் உண்டு)—வளர்ச்சியில் பின் தங்கிய நடுநிலை நாடுகளின் பால் அனுசரிக்கும் வியாபார மோசடிகளும், சுரண்டல் மனப்பான்மையும் மாநாட்டில் கடுமையாக விமர்சிக்கப்பட்டது இதை எதிர்த்து நிற்க நடுநிலை நாடுகள் தங்களுக்குள் இன்னும் நெருக்கமான உறவையும், பரஸ்பர உதவியையும், வியாபாரத்தையும் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது.

குறிப்பாக, வளர்ச்சியடைந்த நாடுகள், மூலப் பொருட்களை மலிவான விலையில், வளர்ச்சியடைந்து வரும் அல்லது வளர்ச்சியில் பின் தங்கிய, நாடுகளிலிருந்து வாங்கி, தாங்கள் உற்பத்தி செய்யும் யந்திரப் பொருட்களை அநியாயமாக விலையை உயர்த்தி விற்கும் அநீதியை எதிர்க்க வேண்டுமென்று முடிவு செய்தனர். இதை முன்னிட்டு யந்திரப் பொருட்களின் விலை உயர்வுக் கேற்ப மூலப் பொருட்களின் விலைகளும் உயர்த்திக் கொள்ளப்பட வேண்டுமென்று சவான் மாநாட்டில் பேசினுர்.

நடுநிலை நாடுகளின் நலன்களையும் உறவையும் பாதுகாத்து வளர்ப்பதற்கு ஒரு நிதி திரட்டிக் கொள்வதென்றும் முடிவு செய்யப்பட்டது.

இறுதியாக வெளியான அறிக்கையில் பின்வரும் சில முக்கியமான அரசியல் பிரச்னைகளும் இடம் பெற்றுள்ளன. தென்னமெரிக்க நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் அமெரிக்கா தலையிடுவது நிறுத்தப்பட வேண்டும்.

அமெரிக்காவின் ஆதிக்கத்திலுள்ள போர்டோரிக்கோ நாட்டின் விடுதலை இயக்கத்திற்கு ஆதரவு, பனுமா குவாதிமலா முதலிய நாடுகளிலுள்ள அமெரிக்க படைத்தளங்கள் வாபஸ் பெறப்படவேண்டும், பாலஸ்தீன விடுதலை இயக்கத்தின் தனி நாடு கோரிக்கைக்கு ஆதரவு, ஐ நா சபையிலிருந்து தென்னுப்பிரிக்காவை வெளியேற்றியது போல் இஸ்ரேல் மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இந்து மாகடலில் டியேகோ கார்சியா தீவில் ஆங்கிலேய உடன்பாட்டுடன் அமெரிக்க படைத்தளம் நிறுவப்பட்டுள்ளதை ஏற்க முடியாது. பதட்ட நிலையை அது அப்பிரதேசத்தில் அதிகரித்துள்ளது. இதுபோன்று மற்றும் சில ஏகாதிபத்திய எதிர்ப்புப் பிரச்சினைகளும்.

ஏகாதிபத்திய எதிர்ப்புணர்ச்சியைக் காட்டும் கருத்துக்களும் முடிவுகளும் ஹவானுவில் மாநாட்டில் தோன்றியது வரவேற்கத் தக்க விஷயமே. ஆனல் இவை நடைமுறையில் நிறைவேற்றப்படுமா என்பது வேறு விஷயம்! இந்திய அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கையைப் பற்றி நமக்கு அனுபவமும் உண்டல்லவா? ஒரு புறம் அமெரிக்க ஏகாதிபத்தியத்தைக் கண்டிக்கிற மாதிரி பேசிக் கொண்டு மறுபுறம்—கிசிங்கர் விஜயத்தின் போது நடந்த மாதிரி—நெருக்கமாக உறவாடுவது நமது அரசாங்கத்திற்கு எப்போதும் சாத்தியம் என்பதையு நாம அடிக்கடி பார்த்து வருகிறோம.

இப்போது கூட அமெரிக்காவிடம் உணவு தானிய இறக்குமதிக்குக் கையேந்தி நிற்பதும், பண உதவி எதிர்பார்பதும் நிற்கவில்லை. இறுதியாக வந்துள்ள செய்திப்படி சுமார் 8 லட்சம் டன் உணவு தானியங்கள் அமெரிக்காவிடமிருந்து கிடைக்கவிருப்பதாக உள்ளது. அதற்கு எந்த நிபந்தனைகளையும் ஏற்று நமது பொருளாதாரத்தையும் மேலும் அடகுவைத்துக் கையெழுத்துப்போடத்தயார் நமது அரசாங்கம்.

ஹவானு அறிக்கையில் காணப்பட்டுள்ள ஏகாதிபத்திய எதிர்ப்பு அம்சங்கள் உறுதியாக நடைமுறையில் நிறைவேற்றப்படுவது, இது குறித்து ஜனநாயக சக்திகளின் உஷார் தன்மையையும், மக்களின் கிளர்ச்சியையும் பொறுத்துத்தானிருக்கிறது.

---

## சங்கரன் கோவிலில்
# தொழிலாளர் தலைவர்கள் கைது

சங்கரன்கோவில், மார்ச். 22—

சங்கரன்கோவில், நெசவுத் தொழிலாளர்கள் நடத்தவிருக்கும் சத்தியாக்கிரகப் போராட்டத்தை அடக்கி ஒடுக்கும் நோக்கத்தோடு போலீசார் அனைத்துத் தொழிற்சங்கத் தலைவர்களையும் கைது செய்து 'லாக்-அப்' பில் வைத்துள்ளனர்.

சிஐடியூ தலைவர்கள் ஆர். எஸ். முப்பிடாதி எஸ். சங்கரன் மற்றும் நகரசபை உறுப்பினர் ச. ஆவுடையப்பன் (திமுக) ச. சங்கரன் [ஸ்தா. காங்) டாக்டர் ச. சுப்ரமண்யம் (இங். காங்) ஆகியவர்களைக் கைது செய்துள்ளனர்.

பஞ்சப்படி உட்பட 5 அம்சக் கோரிக்கைகளை கடந்த 2 மாதங்களாக வற்புறுத்தி வருகிறார்கள். கோவில்பட்டி கோட்டாட்சித் தலைவர் முன் 5 முறை சமரச பேச்சு வார்த்தைகள் நடத்திய பின்னும், கொள்ளை லாபம் அடைந்திருக்கும் முதலாளிகள் பஞ்சப்படி கோரிக்கையை ஏற்க மறுத்து வருகிறார்கள்.

எனவே, வலது கம்யூனிஸ்ட், சோசலிஸ்ட், தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழகம், சுதந்திரா உட்பட 9 சர்வகட்சி சங்கங்களின் போராட்டக் கமிட்டியின் தலைமையில் தொழிலாளர்கள் ஒன்றுபட்ட கிளர்ச்சியில் இறங்கியுள்ளனர்.

---

## வறட்சி நிவாரணம் கோரி
# உண்ணுவிரதக் கிளர்ச்சி
# மதுரையில் 720 பேர் பங்கு
## ரூ.2 ஆயிரம் உண்டியல் வசூல்

மதுரை, மார்ச், 22—

சர்வகட்சி கண்காணிப்புக்குழு மூலம் நிவாரணப்பணிகளை மேற்கொள்ளக்கோரியும்—தமிழகம் முழுவதும் கட்டாயரேஷன் அமுலாக்குதல், படி அரிசி ரூ 2 க்கு வழங்குதல், வறட்சி நிவாரணப் பணிகளை செய்யும் தொழிலாளர்களுக்கு ஆண்-பெண் என்ற பாகுபாடின்றி- ஒருநாளைக்கு ரூ 5 க்கு குறையாமல் கூலி தருதல் ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்தியும், மாநில அரசுக்கு நிவாரண நிதியாககுறைந்தபட்சம் ரூ.25 கோடி தரும்படி மத்திய அரசை வற்புறுத்தியும். இக்கோரிக்கைகளை ஏற்கும்படி மத்திய. மாநில அரசுகளை நிர்ப்பந்திக்க பொது மக்களின் ஆதரவைக் கோரியும் மாநிலம் முழுவதும் உண்ணுவிரதக் கிளர்ச்சி நடத்தப்பட்டது

தமிழ்நாடு விவசாயிகள் சங்கம், ஜனநாயக மாதர்சங்கம், சி. ஐ. டி. யூ. ஆகியவற்றின் அறைகூவலுக்குஇணங்க முறையே 14, 15, 16 தேதிகளில் நடந்த உண்ணுவிரதத்தில் அந்த ஸ்தாபனங்களைச் சார்ந்த பல்லாயிரக்கணக்கான தோழர்கள் கலந்து கொண்டனர்.

மதுரை நகரிலும், மதுரை தாலுகாவில் முக்கியமான 25 இடங்களில் உண்ணுவிரதம் நடந்தது. பல இடங்களில் ஒலிபெருக்கிகள் அமைத்து கோரிக்கைகளை வற்புறுத்தி முழக்கங்கள் ஒழுப்பியும், இயக்கப் பாடல்கள் பாடியும் பிரச்சாரம் செய்யப்பட்டது

தத்தனேரி, 60 அடிரோடு, காளியம்மன் கோவில் தெரு, கோரிப்பாளையம், முனிச்சாலை, கவிட்டுச் சந்தை, ஜெய்ஹிந்த்புரம், மேலமாசி வீதி, சிம்மக்கல், ராஜா மில் காலனி, ஆரப்பாளையம், கிராஸ்ரோடு, மேலப் பொன்னகரம், சமயநல்லூர், பொதும்பு, பாசிங்காபுரம், புதூர், உத்தங்குடி, ஒத்தக்கடை, பூசாரிபட்டி, மாங்குளம், அவணியாபுரம், திருப்பரங்குன்றம், மாடக்குளம், பி. பி. சாவடி, விராட்டிபத்து ஆகிய இருபதைந்து இடங்களில உண்ணுவிரதம் நடந்தது.

இந்த இடங்களில் 3 நாட்களிலும் தமிழ்நாடு விவசாயிகள் சங்கத் தோழர்கள் 165 பேரும், தமிழ்நாடு ஜனநாயக மாதர் சங்கத் தோழர்கள் 275 பேரும் 280 சிஐடியூ ஊழியர்களுமாக மொத்தம் 720 பேர் கலந்து கொண்டனர். உண்ணுவிரதப் பந்தல்களில், உண்டியல் மூலம் சுமார் 2 ஆயிரம் ரூபாய் வசூலானது.

உண்ணுவிரதத்தையொட்டி சிறுசிறு ஊர்வலங்களும், ஸ்குவாடு பிரச்சாரங்களும் நடத்தி பொதுமக்களிடம கோரிககைகள் விளக்கப்பட்டன.

### திருமங்கலத்தில்

விவசாயிகள் சங்கத்தை சார்ந்த 10 பேர் சின்னச்சாமி, ராசாமி, தலைமையிலும், தாசி தார் அலுவலகம் முன்பு சிஐடியூ சார்பில 20 தோழாகளும உண்ணுவிரதம் இருந்தனர். உ. ச. உலகப்பா துவக்கிவைத்தார்.

### உத்தமபாளையத்தில்

கே. சிதம்பரம், வி. கிருஷ்ணசாமி தலைமையில் சி ஐ டியூ மின் தொழிலாளர் சார்பில நடந்த உண்ணுவிரதத்தை கே. ராஜப்பன் துவக்கி வைத்தார். மாலையில் பட்டாபிராமன் (மின் சாரம்) பி. எச். பெரோஸ் கான (எஸ்.எஃப் ஐ.) முடித்து வைத்தனர்.

கோம்பையில் எம், வெங்கிடசுப்ரமண்யன், வி. துமபையன் தலைமையில் 15 விவசாய சங்க தோழர்கள் மேற்கொண்ட உண்ணுவிரதத்தை பி. பாண்டியன் துவக்கி வைத்தும், டி, எஸ். சுப்பையா முடித்துவைத்து பேசினர்.

கே. காசி தலைமையில் 5 லாரிலோடுமேன்கள் உட்பட 30 சிஐடியூ ஊழியர்கள் மேற்கொண்ட உண்ணுவிரதத்தை பி, பாண்டியன் துவக்கிவைத்தும், எஸ். சுருளி முடித்துவைத்தும் பேசினர், உண்ணுவிரதிகளை கே. ராஜப்பன், ஏ. அப்துல் வாகப், அ. தி. மு. க. அமைப்பாளர் எம். முத்துச்சாமி ஆகியோர் வாழ்த்தினர். பின்னர் பெரும் ஊர்வலமும் சி. வ. ரங்கசாமி தலைமையில் பொதுக்கூட்டமும் நடந்தது.

### சுருளியார்

சுருளியார் மேல் முகாமில் எம். ஏ. வாசு தலைமையில் மின் தொழிலாளர் 21 பேரும், பேச்சிமுத்து தலைமையில் 12 தோட்டத் தொழிலாளரும் உண்ணுவிரதம் இருந்தனர்.

சுருளியார் கீழ்முகாமில் சி ஐ டி யூ தோழர்கள் ஹொக்கய்யா தலைமையில் 18 மின் தொழிலாளர்கள் உண்ணுவிரதம் இருந்தனர், சாரங்கபாணி துவக்கி வைத்தார்.

பெரியகுளத்தில் பஸ் நிலையம் முன்பு எஸ் ஏ ரஜாக் தலைமையில் 25 பேர் மேற்கொண்டனர். மாலையில் எம் சின்னசுப்பையன் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் அப்துல்ரகுமான், சுப்பையா, ரஜாக், அழகர், சின்னச்சாமி, பெருமாளசாமி பேசினர்.

ஜெயமங்கலத்தில் பி முத்துமாயன் தலைமையில் 6 பேர் மேற்கொண்டனர். என் ராமசாமி தேனீர் வழங்கி முடித்து வைத்தார்.

மாலையில் சி காமாட்சி தலைமையில் நடந்த கூட்டத்தில் பலர் பேசினர்.

### முகவை மாவட்டம்

சிவகாசியில் சிவன் கோவில் முன்பாக பி பால சுப்ரமணயம் தலைமையில் 18 பேர் மேற்கொண்டனர்.

அருப்புக்கோட்டையில் மின்வாரிய அலுவலகம் முன்பு எம் சாகுல் அமீது தலைமையில் 15 பேர் மேற்கொண்டனர். உண்ணுவிரதத்தை துவக்கி வைத்து கே கந்தசாமி, முடித்து வைத்து எஸ் ஏ பெருமாளும் பேசினர்.

### சாத்தூர்

இங்குள்ள தாலுகா அலுவலகம் முன் எஸ் செல்லச்சாமி (விவசாயிகள் சங்கம) ஏ எம் புஸ்பவனம் [மின் வாரியம்] தலைமையில 15 பேர் மேற்கொண்டனர். சங்கர், நாராயணசாமி உண்ணுவிரதத்தை முடித்து வைத்தனர்.

### நெல்லை மாவட்டம்

திருநெல்வேலி ஜங்சன் பஸ் ஸ்டாண்ட் முன்பு பி சி வேலாயுதம் தலைமையில் உண்ணுவிரதம் நடந்தது.

மேலப்பாளையத்தில் மாதர் சங்கப் பொருளாளர் செல்வி பொன்னி உட்பட 7 பேர் மேற்கொண்டனர். மார்க்சிஸ்ட் கட்சி மாவட்ட செயலாளர் சு பாலவிநாயகம் துவக்கி வைத்தும், மாதர் சங்கத் தலைவர் கிருஷ்ணம்மாள் முடித்து வைததும் பேசினர்.

### அம்பாசமுத்திரம்

இங்கு பி திருஞானசம்பந்தம தலைமையில் 14பேர் உண்ணுவிரதமிருந்தனர் எம வீரப்பன், எஸ் கே பழனிச்சாமி, சுப்பையா ஆகியோர் வாழ்த்திபேசினர்.

செங்கோட்டையில் பஸ் நிலையம முன்பு 12 பேர் உண்ணுவிரதம் இருந்தனர். சி காளிமுததுது துவக்கி வைததும கே சங்கரபாண்டி முடித்து வைத்தும் பேசினர்.

---

## அதிருப்தி லீக் எம்.எல்.ஏ.களிடம்
# விளக்கம் கேட்கப்படும்

கோழிக்கோடு, மார்ச் 20—

கேரள சட்டமன்றக் கூட்டத்தை பகிஷ்காரம் செய்து வரும் முஸ்லிம் லீக் சட்டமன்ற உறுப்பினர்களை சட்ட மன்றத்தை பகிஷ்காரம் செய்வது ஏன் என காரணம் கேட்க மாநிலக் கட்சித் தலைமை முடிவு செய்துள்ளது.

இம்முடிவு முஸ்லிம் லீக்கின் மாநிலத் தலைவர் பூகோயா தங்கல் வீட்டில் கூடிய முக்கியத் தலைவர்களால் எடுக்கப் பட்டது. மேலும் அதிருப்தி முஸ்லிம் லீக் எம் எல் ஏக்கள் 6 பேரின் பதில் கிடைத்த பின் மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பது எனவும் தீர்மானிக்கப் பட்டது

அதே சமயத்தில் அதிருப்தி எம் எல் ஏக்கள் 6 பேரும கொல்லத்தில் தனிக்கூட்டம் நடத்தி பேசினுர்கள். ஆனுல் என்ன பேசினுர்கள் என்பது பற்றி தெரிவிக்க மறுத்து விட்டார்கள்.

---

## தென்வியட்நாமில்
# பொம்மை அரசு திணறல்

சைகோன், மார்ச்.19—

தென்வியட்னுமின் மத்திய மேட்டுப் பகுதிகளில் கூலிப்படைகளுக்கும், விடுதலைப் படைகளுக்கும் இடையே நடைபெறும் யுத்தத்தின் தொடர்ச்சியாக யுத்தம் பரவாத பகுதிகளில் உள்ள நகரங்களிலிருந்துகூட கூலிப் படைகள் வாபசாகிக்கொண்டிருக்கின்றன.

ஆனுல், இவ்வாறு வாபசாவது பின்வாங்குவதில்லையாம். தந்திரங்கள்தானும் இதனை ட்ரய்ஹீன் என்ற பொம்மை அரசின் ராணுவ அதிகாரி கூறினுர்.

கடந்த 12 நாட்களாக நடக்கும் யுத்தத்தில் பல சாலைப் போக்குவரத்துக்களை விடுதலை முன்னணிப் படைகள் துண்டித்து விட்டன என்றும் அவர் கூறினுர். விடுதலைப் படைகளின் தாக்குதல் கடுமையாக உள்ளது என்றும் அவர் கூறினுர்.

மத்திய மேட்டுப்பகுதிகளை காக்க முடியாததாகதான் உள்ளது என்று பொம்மை அரசின் ராணுவச் செய்திகள் கூறுகின்றன.

---

## பீடி தொழிலாளர் சம்பள உயர்வு
# கிளர்ச்சி

ராணிப்பேட்டை. மார்ச். 19—

ராணிப்பேட்டையில் தோல்ஷாப் நிர்வாகிகள் சங்க அலுவலகம் முன்பு ஆர். ஏ. கண்ணன் தலைமையில்—தோல் பதனிடும் தொழிலாளர்கள் தங்களது கோரிக்கைகளை வற்புறுத்தி உண்ணுவிரதக் கிளர்ச்சியில் இறங்கினர்.

இந்த உண்ணுவிரதத்தில் 70 வயது நிரம்பிய வரதம்மாள் உள்பட 12 பெண்களும், 4 தொழிலாளர்களும் கலந்து கொண்டனர்.

சம்பள உயர்வு, விலைவாசிக் கேற்ப பஞ்சப்படி, நியாயமான போனஸ் ஆகிய கோரிக்கைகளுக்காக நடந்த இந்த உண்ணுவிரதத்தை முடித்துவைத்தும் ஆதரித்தும் சத்தூர்கிராமஊராட்சி தலைவர் எஸ். எம். பரசுராமன, டி. லோகநாதன் (எல். ஐ.சி.) எல் ஏ ஆறுமுகம் பேசினர்.

---

## அமெரிக்க எதிர்ப்பு
# ஆர்ப்பாட்டம்

திண்டுக்கல். மார்ச். 19—

இங்கு கடந்த 9-ந் தேதி அமெரிக்க ஏகாதிபத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்ட ஊர்வலம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட கட்சிசார்பில் நடந்தது,

சுருட்டுத் தொழிலாளர் சங்க அலுவலகத்திலிருந்து மாநில விவசாயிகள் சங்க துணைச்செயலாளர் தோழர் என். சங்கரையா தலைமையில் நூற்றுக்கணக்கான தோழர்கள் ஊர்வலமாகப் புறப்பட்டு "அமெரிக்கஏகாதிபத்தியத்தின் சதிகளை முறியடிப்போம்! பாகிஸ்தானுக்கு ஆயுதம் வழங்காதே! அமெரிக்க இந்தியக் கூட்டுக் கமிசன ஒழிக! "முதலிய முழக்கங்களை எழுப்பிக்கொண்டு மணிக்கூண்டை அடைந்தனர்

அங்கு நடந்த கூட்டத்தில் என். வரதராஜன், வி. எஸ். எம் மரைக்காயர் பேசினர்.

---

## உலக சமாதானம் ஏற்பட
# அமெரிக்க உறவு அவசியமாம்

புடாபெஸ்ட், மார்ச் 19—

உலக சமாதான சகவாழ்வுக்காக அமெரிக்க உறவை உறுதிப்படுத்துவது அவசியம் என்கிறார் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் பிரஸ்நேவ்.

ஹங்கேரியின் சோசலிஸ்ட் தொழிலாளர் கட்சியின் 11-வது மாநாட்டில் பேசியபோது இக்கருத்தை கூறினுர்.

அமெரிக்காவுடன் சமாதான சகவாழ்வு, பரஸ்பர லாபகரமான ஒத்துழைப்புக்காகவும் சோவியத் யூனியன் மிக அதிகக் கவனம செலுத்துகிறது- இந்நடவடிக்கைகள் உலக சமாதானத்திற்கு மிக அவசியமானவைகளாகும் என்றும பேசினுர் அவர்.

வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளோடு உறவை ஏற்படுத்திக்கொள்வதில் சோவியத் யூனியனும் ஏனைய சோசலிஸ்ட் நாடுகளும் கிட்டத்தட்ட சுமுகமான வழியில் நுழைந்துள்ளன என்றும் அறிவித்தார் பிரஸ்நேவ்.

ஐரோப்பிய நாடுகளின் பாதுகாப்பு, ஒத்துழைப்புக்கான மாநாடு ஒன்றை அமைப்பது முக்கியம் என்கிறார் பிரஸ்நேவ். அதற்காக சோவியத் யூனியனும் வார்சா ஒப்பந்த நாடுகளும (அல்பேனியாவை தவிர்த்த ஏனைய ஐரோப்பிய சோசலிஸ்ட் [நாடுகள்) தங்களுடைய நடவடிக்கைகளை ஒன்றுபடுத்தி செய்து வருகின்றனர் என்றுர் பிரஸ்நேவ்.

---

## காங்கிரஸ் — வலது கம்யூ.
# கூச்சல்-குழப்பம்
## மேற்கு வங்க சட்டமன்றத்தில்

கல்கத்தா, மார்ச். 20—

மேற்குவங்க சட்டசபையில் தாய்க் காங்கிரசான ஆளும் காங்கிரசுக்கும், சேய் காங்கிரசான வலது கம்யூனிஸ்டுக்குமிடையே பலத்த தகராறு ஏற்பட்டு, மானக்கேடாகப் போய்விட்டது.

இம்மாதம் 7ம் தேதியன்று மித்னுபூர் மாவட்டத்தில் பங்குரா என்ற ஊரில், வலது கம்யூனிஸ்டுகள், கணேஷ்ராவுத் என்பவரின் வீட்டிற்குள் புகுந்து தாக்குதல் நடத்தியதாகவும், அந்த ஊர் மக்கள் எதிர்த்துத் தாககவே, ஆத்திரமேலிட்ட வலது கம்யூனிஸ்டுகள், கணேஷ் ராவுகதின் 12வயது மகளையும் 6வயது மகளையும் அவர்களின் குடிசைககுள் தள்ளி வெளிப்பூட்டு போட்டு, குடிசைக்குத் தீ வைத்துக் கொளுத்தி விட்டதாகவும், இதனல் அவ்விரு குழந்தைகள் தீயில் கருகி மாண்டு போயின வென்றும, காங்கிரஸ் உறுப்பினர் பங்கஜபானர்ஜி குற்றம் சாட்டினுர்.

இப்படிப்பட்ட காட்டுமிராண்டிச் செயலில் ஈடுபடுவது, வலது கம்யூனிஸ்டுகள் கூறும் முற்போக்கு நடவடிக்கையா? இவர்களை கடுமையாகத் தண்டிக்க வேண்டும்' என்று அவர் கூறினுர்.

இதை வலது கம்யூனிஸ்ட் உறுப்பினர் கீதா முக்கர்ஜி மறுத்துப்பேச எழுந்தார். உடன 12 காங்கிரஸ் உறுப்பினர்கள் தங்களுககுள் உள்ள கோஷ்டிச் சண்டைகளை மறந்து, ஒருமுகமாக எழுந்து கூப்பாடு போட்டு, கீதா என்ன பேசினுர் என்றே தெரியாமல் செய்து விட்டார்கள்.

இச்சமயத்தில் மந்திரி ஜெயினுல் சுபெதின் எழுந்து, 'இந்தப் படுகொலைச் செயலைக்கேட்டு அதிர்ச்சியடைகிறேன்; குற்றவாளிகளைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும்"— என்றுர்.

பாரபட்சமற்ற விசாரணை நடத்தப்பட வேண்டுமென்றுர் வலது கம்யூனிஸ்ட் கீதா முக்கர்ஜி,

உடனே மந்திரி சுபெதின் எழுந்து, "எந்த சட்டவிதியின்படி விசாரணைகோருகிறுர்?" என்று எதிர்த்துக்கேட்டார்.

இதற்கிடையில் இருதரப்பிலும் கூச்சலும்குழப்பமும் 20 நிமிடங்கள் நீடித்தன.

இவ்வாறு தாயும்சேயும் கூச்சலிட்டுக் கொண்டார்கள்.

---

## ஆசிரியர் கூட்டணி நிறுவனர்
# மாஸ்டர் இராமுண்ணி மறைவு

சென்னை, மார்ச். 22—

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின நிறுவனர் திரு. மாஸ்டர் இராமுண்ணி கடந்த 20. 3. 75-ந் தேதி பிற்பகலில் இங்கு காலமானுர் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். இவர் இருதயநோய் காரணமாக சிகிச்சை பெற்று வந்தார்.

காலமான மாஸ்டர் இராமுண்ணிக்கு வயது 65.

தொடக்கப்பள்ளி ஆசிரியர் சமுதாயத்தில் எழுச்சியை உருவாக்கிட, தமிழகத்தில் ஆசிரியர்களிடையே தனிப்பெரும இயக்கமாக வேரூன்றியுள்ள தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியை 1946-ல் நிறுவிய இவர், ஆசிரியர்களது கோரிக்கைக்கான பல போராட்டங்களுக்குத்தலைமை வகித்து பலமுறை சிறை சென்றுள்ளார்.

### மார்க்சிஸ்ட் கட்சி அனுதாப தந்தி

மாஸ்டர் இராமுண்ணி மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து, அவரது துணைவியார்திருமதிரமணிபாய்க்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்கள் எம். ஆர். வெங்கட்ராமனும், ஏ. பாலசுப்ரமண்யமும் தநதிச் செய்தி அனுப்பியுள்ளார்கள்.

### ஆசிரியர் கூட்டணி

மாஸ்டர் இராமுண்ணியின் மரணம் தொடக்கப் பள்ளி ஆசிரியர் சமுதாயத்திற்கும் ஆசிரியர் கூட்டணிக்கும் பேரிழப்பாகும் என்று ஆசிரியர் கூட்டணியின் தலைவர் ஜெ. எஸ். இராசும் பொதுச் செயலாளர் செ. முத்துச்சாமியும் கூட்டாக விடுத்துள்ள ஓர் அறிக்கையில் கூறியுள்ளார்கள்.

ஆசிரியர்கூட்டணியின் நிகழ்ச்சிகள் 20-ந் தேதி முதல் ஒரு வார காலத்துக்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளதாகவும் அவர்கள் அறிவித்துள்ளனர்.

---

## போர்த்துக்கல்லில்
# கட்சிகளுக்கு தடை

லிஸ்பன், மார்ச். 19—

போர்த்துக்கல் அரசாங்கம் அங்நாட்டில் 3கட்சிகளை தடை செய்துள்ளது.

மாவோயிஸ் தொழிலாளி வர்க்கததின் புதிய அமைப்பு, விவசாயி—தொழிலாளி கூட்டணி, பிற்போக்கு கட்சியான கிறிஸ்தவ ஜனநாயகக்கட்சி ஆகிய மூன்று கட்சிகளே தடை செய்யப்பட்டவையாகும்.

இத்தடையுத்தரவின்படி இம்மூன்று கட்சிகளும ஏப்ரல் 12-ல் நடைபெறவிருக்கும் தேர்தலில் பங்குபெறுவது தடை செய்யப்பட்டுள்ளது.

ஏனைய அரசியல் நடவடிக்கை, பொதுப் பிரச்சாரம், பேரணி ஆகியவை அத்தேர்தல் தேதி வரை மேற்கொள்ளக்கூடாது.

போர்த்துக்கல் ராணுவ கவுன்சிலை கவிழ்க்க பிற்போக்கு இராணுவத்தினரை தூண்டி விட்டதில் கிறிஸ்துவ ஜனநாயக கட்சியின் தலைவரான ஓசோரியாவும் ஒருவர் என குற்றஞ்சாட்டப்பட்டவர்.

தொழிலாளி வர்க்கத்தின் புதிய அமைப்பானது தடை செய்யப்பட்ட போதிலும அக்கட்சியின் ஆயிரக்கணக்கான ஆதரவாளர்கள் மத்தியில் லிஸ்பனில் கூடி அரசைக் கவிழ்க்கும் சதியில் ஈடுபட்டவர்களைத் தண்டிக்குமாறு ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இந்து 20—3—75

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.